**திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய**

## திருநெல்வேலித் தல விநாயகர்

## பொள்ளாப் பிள்ளையார் மாலை

சுழியே உலக எழுத்துருவம் வட்டம் கோடு எனக்கண்டு
வழுத்தி எழுதும் முதற்குறியாம் வடிவில் உறையும் முதற்பொருளே
அழுக்கு மனத்தின் இருள்நீக்கி ஞான தீபம் ஏற்றிடவே
தொழுது உன்னை தினம்நினைந்தேன் நெல்லை பொள்ளா வாரணமே! 1.

அப்பம் பால்தேன் பணியாரம் அவல்நெய் பொரியும் பலபயறும்
ஒப்பில் அடிசில் மோதகமும் இக்கும் கனியும் படையலிட
தொப்பை நிறைத்து நம்பிகேட்க தெய்வ முறைநூல் இருக்குமிடம்
செப்பி அருளும் உனைத்தொழுதேன் நெல்லை பொள்ளா வாரணமே! 2.

துடிமான் கரத்தோன் மகிழ்பாலா தோகை வடிவாள் நற்பேறே!
வடிவேல் முருகன் தொழுநாதா வலபை மருவு திருமார்பா
நெடிய துதிக்கைத் திருமுகனே! எளியன் மிடிநோய் தீர்ந்திடவே
படியில் உன்னை சரணடைந்தேன் நெல்லை பொள்ளா வாரணமே! 3.

கல்லா செல்வ மூடரிடம் கவிகள் பாடி உழலாமல்
பொல்லா பொய்யை தினம்பேசி பொழுதை வீணே கழிக்காமல்
சொல்லில் மெய்யை பேசிடவும் தொழும்பர் இணக்கம் அமைந்திடவும்
புல்தார் புயனே அருள்செய்வாய் நெல்லை பொள்ளா வாரணமே! 4.

பள்ளி கொண்டான் திருப்பதமும் கயிலை நாதன் பெரும்பதமும்
கள்ளார் மலரோன் தொல்பதமும் ககன வேந்தன் நற்பதமும்
உள்ளேன் அய்யா உன்பாத பதத்தை உள்கி நாடிவந்தேன்
உள்ளம் உவந்து அருள்தருவாய் நெல்லை பொள்ளா வாரணமே! 5.

குரங்கு மனமே ஒன்றுரைப்பேன் கேள்மின் அங்கு இங்குளங்கும்
மிரண்டு தாவித் திரியாது அளியார் கடைக்கண் உடையவனாம்
திரள்கை வதனன் திருவடியைப் பற்றி சரணை அடைவாய்நீ
அருள்செய் அவன்தான் செல்வமலி நெல்லை பொள்ளா வாரணமே! 6.

சித்தர் சிந்தை எழுசுடரே சித்தி புத்தி மணவாளா
பத்தர் நெஞ்சத் தடமலரே பற்று அற்றார் பற்றுகோடே
நித்தம் உன்னைத் தொழுதனனே நிலத்தஇன்ப பேறுஅருள்வாய்
சத்தி வடிவாள் திருச்செல்வ நெல்லை பொள்ளா வாரணமே! 7.

மறத்தால் பகையை புறங்கண்டு மணியார் மகுடம் தரித்துவகை
உறவாய் ஆண்ட மன்னரிலே புவியில் இருந்தார் யார்உள்ளார்
பிறப்பு இறப்பு இயல்புணர்வாய் மனமே உனக்கு புகலிடம்தான்
இறைவி வடிவாள் திருத்தளிவாழ் நெல்லை பொள்ளா வாரணமே! 8.

மகவான் போகப் பெரும்பொருளும் மாலோன் மரும எண்திருவும்
நிகரில் குபேரன் நவநிதியும் நிலைத்த பொருளோ என்நெஞ்சே!
அகிலம் கூறும் நிலைப்பொருளாம் ஒன்று உண்டு நீஅறிவாய்
பகரும் நிலைத்த அப்பொருளே நெல்லை பொள்ளா வாரணமே! 9.

ஆறு இடத்து வேர்பதியும் அறுகு என்னும் பசும்புல்லும்
பேறு பெறவே அணிபவனே தேனார் எருக்கு வேட்டவனே
கூறும் தொழும்பர் குழாத்துடனே கூட்டி வைத்து குணங்கொள்ளும்
பேறு எமக்கு தந்தருள்வாய் நெல்லை பொள்ளா வாரணமே! 10.

செருக்கு மயக்கம் வினைஎனும்மும் மலங்கள் உயிரை வாட்டாது
திருகி பிடிங்கி எறித்தருளி பதியை புணரச் செய்பவனே
உருகு தொழும்பர் மனவிளக்கே உலகின் முதன்மை பெருமானே!
மருகும் மனத்தை தெளிவிப்பாய் நெல்லை பொள்ளா வாரணமே! 11.

நான்கு வேதம் வகுத்தளித்த முனிவன் நவின்ற காதையினை
வான்சேர் முகட்டு பனிவரையில் வலிய கோடால் வரைந்தவனே
நான்கு நெறியில் மனம்அமைத்து நலங்கள் பெறவே உனைதொழுதேன்
சான்றாய் நிற்கும் கரிமுகனே! நெல்லை பொள்ளா வாரணமே! 12.

ஒற்றைக் கொம்பா! புகர்வண்ணா! முறமா செவியா! பெருவயிறா!
சுற்றி நிற்பார் மகிழசெய்த விகடா! தடைக்கும் மன்னவனே!
பற்றும் இடரைக் களைபவனே! பூத கணத்து நாயகனே!
கற்ற பயனே! ஐங்கரனே! நெல்லை பொள்ளா வாரணமே! 13.

பிள்ளை மதிசேர் திருமுடியா! புகையின் ஒளியே! ஆனைமுகா!
தெள்ளும் முறமாம் பெருஞ்செவியா! தூய தொழும்பர் பெருநிதியே!
புள்ளி மயிலோன் அண்ணாவே! வளைந்த துதிக்கை உடையவனே!
உள்ளத் தெளிவே! தென்றல்சூழ் நெல்லை பொள்ளா வாரணமே! 14.

உண்ணும் போதும் உழைக்குபோதும் தும்மும் போதும் விழும்போதும்
கண்கள் மூடி உறங்குபோதும் கனவில் நனவில் உன்நாமம்
எண்ணம் வைத்து தொழுதிட்டேன் எளியேன் உன்தாள் நிழலடையும்
பண்பைப் பெறவே வரம்தருவாய் நெல்லை பொள்ளா வாரணமே! 15.

மறைகள் நவிலும் நாவுடையான் மல்லார் புயங்கள் பலவுடையான்
கறைசேர் கண்டன் திருமலையை கரத்தால் பெயர்த்த திறலுடையான்
குறைவில் இலங்கை வேந்தனிடம் ஆத்ம இலிங்கம் வாங்கியதை
தரையில் வைத்து ஆடல்செய்தான் நெல்லை பொள்ளா வாரணமே! 16.

எருக்கு அறுகு நாயுருவி இலந்தை துளவம் வன்னிநாவல்
மருது மத்தம் மாசிபச்சை இலைகள் கொண்டு தினந்தோறும்
உருகி உன்னை அருச்சித்தேன் தொழும்பர் பதத்துள் உடல் படிய
வரத்தை நல்கி ஆட்கொள்வாய் நெல்லை பொள்ளா வாரணமே! 17.

மகிழம் முல்லை செங்கழுநீர் மல்லி தாழை மந்தாரம்
அகத்தி புன்னை இலிங்கப்பூ மத்தம் கோங்கு செம்பரத்தை
பகரும் அடுக்கம் சண்பகமும் பறித்து மாலை தொடுத்தளித்தேன்
உகந்து அணிந்து அருள்புரிவாய் நெல்லை பொள்ளா வாரணமே! 18.

ஆத்தி சூடி சொல்கிழவி அகவல் பாடி உன்னைவேண்டி
ஏத்த அவளை நெடுங்கையாலே எடுத்து கயிலை சேர்த்தவனே
ஆத்தி அணிவான் தனைசுற்றி அரிய கனியை பெற்றவ, யான்
கோத்த மாலை அணிந்தருள்வாய் நெல்லை பொள்ளா வாரணமே! 19.

உள்ளக் கலத்தில் உனடியேற்றி உலக உவரி புகும்போது
கள்ள மலமாம் சுறாதாக்க கதறி பதறும் போது உன்னை
உள்ளும் உணர்வு தந்தருள உன்தாள் மலரை சரணடைந்தேன்
புள்ளார் சோலை மணங்கமழும் நெல்லை பொள்ளா வாரணமே! 20.

குலத்தால் மதத்தால் வீணான வாதம் வேண்டேன் எம்மானே
குலங்கள் ஒன்றே இறையுமொன்றே என்னும் தெளிவைப் பெற்றிடவே
புலங்கள் அடக்கி துதிபுரிந்தேன் பொன்னார் பூணாம் கிம்புரியாய்
நலமே தரவே வந்தருள்வாய் நெல்லை பொள்ளா வாரணமே! 21.

அரசு நிழலில் அமர்ந்தவனே! ஆலம் இருந்தான் மகிழ்மகவே!
மருது முறித்தான் திருமருகா! கடம்பத் தாரான் அண்ணாவே!
வரம்பில் வரங்கள் தந்தருள்வாய் வேய்சூழ் வனத்து வடிவாளின்
கரைகொள் பொருநைத் துறைமருவு நெல்லை பொள்ளா வாரணமே! 22.

கள்ளம் அறிய எம்நெஞ்சே! கனிவாய் உனக்கு உரைப்பேன்கேள்
கள்ளம் சூழ்ந்த நானிலத்தில் கலங்கித் தளரும் உனக்குவழி
கள்ளார் கூந்தல் வடிவம்மை களிக்கும் பிள்ளை தாளடைவாய்
வள்ளல் அவனே புவியறிந்த நெல்லை பொள்ளா வாரணமே! 23.

பகலோன் இரவோன் புவியின்சேய் புலவன் பொன்னன் வெள்ளியுடன்
நிகரில் காரி இருஅரவு நிகழ்த்து இடர்கள் எலாம்நீக்கி
பகரும் நலங்கள் புரிந்திடவே பணிந்து நாளும் துதிசெய்தேன்
அகடு பெருத்த ஆனைமுகா நெல்லை பொள்ளா வாரணமே! 24.

வலக்கை பிடித்த அங்குசத்தால் வலிய வினையை பிடித்திழுத்து
பலம்சேர் பாசக் கயிற்றாலே பிணித்து உயிரைக் காத்திடுவாய்
உலகை தம்பி சுற்றிடநீ பெற்றோர் உலகு எனச் சுற்றி
நலமாம் நீதி காட்டியவா நெல்லை பொள்ளா வாரணமே! 25.

நாகம் உரித்தான் அருள்மகவே நகம்சேர் குமரன் தொழுநாதா
நாக அணையான் மருகோனே நாக மகளின் நற்புதல்வா
பாகு மொழியர் மயல்ஒழித்து பாதம் பற்ற அருள்தருவாய்
நாகம் தவழும் மாளிகைசூழ் நெல்லை பொள்ளா வாரணமே! 26.

உள்ளம் தளியா உணர்வுதனை நுந்தா விளக்கா பாமலரால்
உள்கி உன்னை அருச்சித்தேன் எல்லா உயிரும் தம்முயிராய்
கொள்ளும் நெஞ்சம் தந்திடுவாய் கந்தன் விரும்பு குறக்கொடியாம்
வள்ளி முன்னே வந்தவனே நெல்லை பொள்ளா வாரணமே! 27.

திரியும் புரங்கள் எரிந்திடவே திருமால் கணையாய் மலைவில்லாய்
பரிகள் மறையாய் சாரதியா பிரமன் அமைய புவித்தேரில்
அரனார் ஏறும் வேளை, அச்சு முறித்த எந்தாய் பரிவன்பு
கரவில் மனமும் தந்திடுவாய் நெல்லை பொள்ளா வாரணமே! 28.

கண்கள் உன்னைக் காணவேண்டும் காதால் உன்சீர் கேட்கவேண்டும்
திண்கை உன்னைத் தொழவேண்டும் காலால் உன்னை சுற்றவேண்டும்
வண்மை தலையால் பணியவேண்டும் இந்த வரங்கள் நல்கிடுவாய்
மண்ணின் நுதலா திகழ்நகராம் நெல்லை பொள்ளா வாரணமே! 29.

மலங்கள் மூன்றும் மங்கிடவும் மனமும் தெளிவு பெற்றிடவும்
துலங்கும் தூய நெறிசெலவும் தொழும்பர் பணியில்கூடிடவும்
நலங்கள் எல்லாம் பெற்றிடவும் நாயேன் நாடி உனைஅடைந்தேன்
புலங்கள் சூழ்ந்து வளங்கொழிக்கும் நெல்லை பொள்ளா வாரணமே! 30.

முற்றும்